சாய்ந்தது; அவரும் அதனுடன் சாய்ந்து கீழே விழுந்து விட்டார்.

அதன் பலன்? –முழங்கால் இரண்டிலும் நல்ல அடி; தாமாக எழுந்து நிற்கக்கூட முடியவில்லை அவரால்.

நல்லவேளையாக இந்த விபத்து அவருடைய மாளிகைக்கு எதிர்த்தாற்போலவே நடந்ததால், இதைக் கண்டு வெளியே ஓடிவந்த நண்பர்களில் சிலர் அவரை அப்படியே தூக்கிக் கொண்டு உள்ளே போனார்கள். உடனே டாக்டர் வரவழைக்கப்பட்டார். தக்க சிகிச்சைக்குப்பின் அவருடைய கால்கள் பழைய நிலைக்குத் திரும்பப் பத்துப் பதினைந்து நாட்கள் ஆயின. அதுவரை அவர் 'நொண்டி யாகவே இருக்க நேர்ந்தது.

இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், அன்று வெளியான 'ஹரிதாஸ்' படத்திலும் அவர் 'நொண்டி'யாக நடித்திருந்ததுதான்!

இந்த 'ஒற்றுமை', காரணமாக இதை அன்று பலர் 'அபசகுன'மாகக் கருதினார்கள். ஆயினும் அமோக ஆதரவு. அதனால் மேலும் மேலும் வளர்ந்த பாகவதரின் புகழ் – எல்லாமாகச் சேர்ந்து அந்த 'அபசகுனத்தை'ப் பொய்யாக்கி வந்தன.

அதற்கேற்றாற்போல் 'ஒரு படத்தில் நடிக்கும்போது இன்னொரு படத்தில் நடிக்க ஒப்புக்கொள்ளமாட்டேன்!' என்று அதுவரை மறுத்துவந்த பாகவதரை, அந்த வருடம் சேர்ந்தாற்போல் பத்துப்படங்களில் நடிக்கப் படாதிபதிகள் எப்படியோ ஒத்துக் கொள்ள வைத்துவிட்டார்கள். அது மட்டுமல்ல; அதுவரை ஒரு படத்தில் நடிக்க ஒரு லட்சம் ரூபாய் கொடுத்துவந்தவர்கள், இப்போது இரண்டு லட்சம் ரூபாய் கொடுக்கவும் முன்வந்தார்கள்.அதன் பயனாக ராஜயோகி, ஸ்ரீமுருகன், வால்மீகி, உதயணன், பக்தமேதா, பில்ஹணன், ஜீவகன், காளிதாஸ், நம்பியாண்டார் நம்பி



போன்ற படங்களில் அவர் ஒரே சமயத்தில் ஓய்வொழி வில்லாமல் நடிக்க நேர்ந்தது.

இப்படியாகப் பாகவதரின் புகழ் உச்சநிலையை அடைந்த அதே வருடத்தில், அவருடைய 'அந்தரங்க வாழ்க்கை'யைப்பற்றி –இந்த வாழ்க்கை பாகவதருக்கு மட்டும்தான் உண்டு என்பதில்லை; வசதி படைத்த எல்லோருக்குமே உண்டு. ஆனாலும் இதைப்பற்றித் தாறுமாறாக எழுதிப் பிழைப்பதற்கென்றே ஒரு சில 'மஞ்சள் பத்திரிகை'க்காரர்கள் இல்லையா?

அவர்களுடைய அவதூறும் உச்சநிலையை அடைந்தது. அவர்களில் அப்போது குறிப்பிடத் தக்கவரா யிருந்தவர் திரு சி.என்.லட்சுமிகாந்தன். அவருக்கும் 'அந்தரங்க வாழ்க்கை' என்று ஒன்று இருந்திருக்கலாம். அதற்கு வேண்டிய வசதிமட்டும் இருந்திருந்தால்! – பாக வதரின் போதாத காலம், அந்த வசதி அவருக்கு இல்லாமற் போய்விட்டது!

இவரைப் பற்றியும், இவரால் பாகவதர் அடைந்த கஷ்டநஷ்டங்களைப்பற்றியும் அன்றைய சினிமாப் பத்திரிகைகளில் ஒன்று வருடம், மாதம், தேதியுடன் பின்வருமாறு எழுதியிருந்தது:

''... உலகமே ஒரு நாடகமேடை என்பார்கள்; அந்த நாடகமேடையில் நாளை என்ன நடக்கும்?' என்பதை யார் அறிவார்? புகழின் உச்சியை அடைந்த பாகவதரின் காலடியில் ஓர் அதல பாதாளம் இருந்ததை அப்போது யாரும் காணவில்லை. திரு லட்சுமிகாந்தன் 1944ம் வருடம் நவம்பர் மாதம் 8ந்தேதி கத்தியால் குத்தப்பட்டு மாண்டார். 'திருவாழத்தான் இருந்தும் கெடுத்தான்; செத்தும் கெடுத்தான்' என்பார்கள். அதுபோல லட்சுமிகாந்தன் உயிருடன் இருந்ததைவிட இறந்து போனது பாகவதரைப் பல இன்னல்களுக்கு உள்ளாக்கி விட்டது. டிசம்பர் மாதம்

27ந்தேதியன்ற பாகவதர் கைது செய்யப்பட்டார். முதலில் அவர் ஜாமீனில் விடப்பட்டார் என்றாலும், பின்னால்–அதாவது 1945–ம் வருடம் பிப்ரவரி மாதம் 12–ந்தேதி ஜாமீன் ரத்துச் செய்யப்பட்டு, அவர் மீண்டும் காவலில் வைக்கப்பட்டார்.

தமிழ்நாட்டிலேயே மிகுந்த பரபரப்பை உண்டாக்கிய வழக்குகளில் பாகவதர் வழக்குக்குத்தான் முதல் இடம் கொடுக்கவேண்டும். பம்பாயிலிருந்து இந்த வழக்குக்காகவே வரவழைக்கப்பட்டிருந்த திரு கே.எம்.முன்ஷியும், சென்னையைச் சேர்ந்த பிரபல வக்கீல்களில் சிலரும் ஒன்று கூடி இதில் வாதித்தனர். ஆயினும் 1945–ம் வருடம் மே மாதம் 3–ம் தேதியன்று தீர்ப்புகட கூறப்பட்ட இவ்வழக்கில், பாகவதருக்குத் தீவாந்தரத் தண்டனை விதிக்கப்பட்டு விட்டது.

இந்தத்தண்டனைக்குப் பிறகு பாகவதரும் மற்ற எதிரிகளும் ‘அப்பீல்’செய்து கொண்டனர். அப்பீல் வழக்கை அப்போது பிரதம நீதிபதியாயிருந்த ஸர்லயனல் லீச்சும், நீதிபதி லட்சுமண ராவும் விசாரணை செய்து, அப்பீலைத் தள்ளி விட்டுத் தண்டனையை உறுதிப்படுத்தினர்.

எதிர்பாராத விதமாகப் பாகவதருக்கு நேர்ந்த இந்த கஷ்டத்தைக் கண்டு சினிமா ரசிகர்கள் மனம் வெதும்பினர். அவரிடம் கருணை காட்டி, அவரை விடுதலைசெய்ய வேண்டும் என்று அங்கங்கே கூட்டங்கள் போட்டுக் கேட்டுக் கொண்டனர். பாகவதரின் திடீர் மறைவால் அன்றைய படத் தொழில் பெரிய அதிர்ச்சிக்குள்ளாகியது. ஏன், ஸ்தம்பித்து விட்டதுஎன்று கூடச் சொல்லலாம். இந்த நிலையில் அவருக்கு முன்பணம் கொடுத்திருந்த முதலாளிகளில் சிலர், மேலே என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தனர்; திண்டாடினர்.



இதை அறிந்த பாகவதர் தம்மைப் பார்க்க வந்திருந்த தம் குடும்பத்தாரிடம் சொன்னார்:

‘‘நம்முடைய சொத்துக்கள் அத்தனையையும் நாம் இழக்க நேர்ந்தாலும் சரி, அவற்றை விற்று எனக்கு யார் யார் முன் பணம் கொடுத்திருக்கிறார்களோ, அவர்களுக் கெல்லாம் அவர்கள் கொடுத்த பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடுங்கள். என்னால் யாருக்கும் எந்த விதமான கஷ்டமும் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளுங்கள்.’’

பாகவதர் சொன்னது சொன்னபடி, அவருடைய குடும்பத்தார் பணத்தைத் திருப்பி கொடுக்கவந்தபோது, ஒரே ஒருவரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் ஒரு கைக்கு இருகைகளாக நீட்டித் தாங்கள் கொடுத்த முன்பணத்தை வாங்கிக் கொண்டார்களாம். வாங்காத அந்த ஒரே ஒருவர் மட்டும் யார்?...

அவர் தான் தமிழ்நாட்டு சினிமா உலகில் ‘லேனா’ என்று சில வருடங்களுக்கு முன்னால் பிரசித்தி பெற்றிருந்து, காலவித்தியாசத்தால் இப்போது இருக்குமிடம் தெரியாமல் இருக்கும் மானகிரி திரு இலட்சுமணன் செட்டியார் என்பவராவார்.

அவர் அப்போது சொன்னது இது:

‘‘எனக்குப் பணம் பெரிதல்ல; பாகவதரின் குணம் தான் பெரிது. அவருக்கு இப்படி ஒரு கஷ்டம் நேர்ந்திருக்கும் இந்தச் சமயத்தில் மேற்கொண்டு ஏதும் கொடுக்கக்கூடிய நிலையில் நான் இல்லையே என்பதற்காகத்தான் நான் இப்போது வருந்துகிறேனே தவிர, கொடுத்த பணத்தை எப்படித் திரும்ப வாங்குவது என்பதற்காக நான் வருந்தவு மில்லை; வாடவும் இல்லை. நீங்கள் போய் அவரை விடுதலை செய்வதற்கான வேறு வழிவகைகளைத் தேடுங்கள்.’’

**கனகசபேசன் திருநடம் காண விரைந்தேனே!...**

உண்மை அநீதியின் கண்களுக்கு மட்டுமல்ல; நீதியின் கண்களுக்கும் சில சமயம் தெரியாமற் போய் விடுவதுண்டு. அதைத்தான் 'விதி' என்று அந்த நாளிலும் சரி, இந்த நாளிலும் சரி – சிலர் சொல்லி வந்தார்கள்; சொல்லி வருகிறார்கள்.

எது எப்படியிருந்தாலும் ஒன்று மட்டும் உண்மை – அமைதியற்ற இந்த உலகில் மனிதன் ஓரளவு அமைதியுடன் வாழ வேண்டுமானால் அவன் தன்னுடைய செய்கைகளுக்கும், அவற்றால் தான் அனுபவிக்க நேரும் கஷ்ட நஷ்டங்களுக்கும் அவ்வப்போது ஏதாவது ஒரு சமாதானம் தேடிக்கொள்ள வேண்டியிருக்கிறது. அந்த சமாதானங்களில் ஒன்றே விதி.

இந்த விதி வசத்தாலோ என்னமோ, இரண்டு வருடங்கள், இரண்டு மாதங்கள், பதின்மூன்று நாட்கள் சிறைவாசம் செய்த பாகவதர் 25.4.47 அன்று விடுதலை யானார். சிறைக்கு வெளியே கூடியிருந்த சினிமா உலக பிரமுகர்களும், ரசிகர்களும் ஏக ஆரவாரத்தோடு அவரை வரவேற்றனர். அவர்களுக்கெல்லாம் தம்முடைய நன்றியைத் தெரிவித்து விட்டு, பாகவதர் நேரே வடபழனி ஆண்டவர் சந்நிதிக்குச் சென்றார். 'எல்லாம் உன் செயல்' என்று இரு கைகளையும் கூப்பி அவரைத் தொழுதுவிட்டு, அன்றிரவே திருச்சிக்கு பயணமானார்.

விடுதலையான பாகவதர் 'இந்தப் படத்தில் நடிக்கப் போகிறார். அந்த படத்தில் நடிக்கப்போகிறார்' என்று பல வதந்திகள் கிளம்பின. அவற்றையெல்லாம் பொய்யாக்கி விட்டு, அவர் 'நரேந்திரா பிக்சர்ஸ்' என்று முற்றிலும் தமக்கே சொந்தமான ஒரு கம்பெனியை ஆரம்பித்தார். அதன் முதல் தயாரிப்பாக 'ராஜமுக்தி' உருவாயிற்று. இது பாகவதரின் பத்தாவது படம். இந்தப் படத்தின் திரைக்கதை



வசனத்தை அமைத்துத் தந்தவர் திரு.புதுமைப்பித்தன். இதில் பாகவதருக்கு ஜோடியாக நடித்தவர் திருமதி பானுமதி. புகழ்பெற்ற திரு.ராஜா சந்திரசேகரால் டைரக்ட் செய்யப்பட்ட இப்படம் எதிர்பார்த்த அளவு வெற்றி பெறவில்லை.

'ராஜமுக்தி'க்குப் பிறகு பாகவதரின் பதினோராவது படமாக வெளிவந்தது 'அமரகவி'. இதன் திரைக்கதை வசனத்தைக் கவிஞர் சுரதா அமைத்திருந்தார். இந்தப் படத்தில் பாகவதருக்கு ஜோடியாக நடித்திருந்தவர் டி.ஆர்.ராஜகுமாரி. திரு எப். நாகூரால் டைரக்ட் செய்யப் பட்டிருந்த இப்படம் ஓரளவு வெற்றியடைந்ததென்றே சொல்லவேண்டும். ஆனாலும் அந்த வெற்றி பாகவதரைப் பழைய நிலைக்குக்கொண்டுவரும் அளவுக்கு உதவ வில்லை. காரணம், அதற்குள் காலமும் மக்களும் எத்தனையோ வகையில் மாறி விட்டிருந்ததுதான்!

இதைப் புரிந்துகொண்டு அந்த நாளிலும் சரி.இந்த நாளிலும் சரி – 'பிழைக்கத்தெரிந்தவர்கள்' பிழைத்தார்கள்; 'பிழைக்கத் தெரியாதவர்கள்' செத்தார்கள்; சாகிறார்கள். உதாரணத்துக்கு இந்தச் சம்பவத்தைத்தான் பாருங்களேன்! – இதை நான் கூறவில்லை; பாகவதரின் வீட்டு வாத்தியாரா யிருந்த திரு.அமிர்தவாசகம் கூறுகிறார்;

''பெங்களூர் காந்தி நகரில் பாகவதர் குடும்பம் வாழ்ந்துவந்த காலம் அது. குழந்தைகள் நால்வருக்கு– 'பாகவதருக்கு மூன்று குழந்தைகள்தானே? இவரென்ன, நான்கு என்று குறிப்பிடுகிறாரே?' என்று நீங்கள் ஐயுறலாம் – ஆம். குமாரிகள் சுசீலா, சரோஜா, குமாரர் ரவீந்திரன் ஆகியோர் தவிர, பாகவதர் அவர்களின் கடைசித் தங்கையான பங்கஜமும் அவர்களுடைய நாலாவது குழந்தையாக இருந்து வந்தது. இவர்களுக்குப் 'பிரைவேட்' டாக 'டியூஷன்'சொல்லித் தரும் ஆசிரியனாக நான் இருந்து வந்தேன்.

பெண் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்க வேண்டுமென்பது 'அம்மா'வின் ஆசை - பாகவதர் அவர்களின் துணைவியாரை நாங்கள் 'அம்மா' என்றுதான் குறிப்பிடுவது வழக்கம் - அவர்களுடைய விருப்பப்படி, நான் பிள்ளைகளை அழைத்துச்சென்று ஒரு பெண்கள் பள்ளியில் இடம் கேட்டேன். குழந்தைகளை அறிமுகப்படுத்தும் போது, 'இன்னாருடைய குழந்தைகள்' என்று கூறவேண்டியதாயிற்று. இது தெரிந்ததும் அந்தப் பள்ளி ஆசிரியைகள் இதைத் தலைமையாசிரியைக்குச் சொல்ல, அவர் இவர்களுடைய அப்பாவைக் கூட்டி வந்தால்தான் இவர்களைப் பள்ளியில் சேர்க்க முடியும்' என்று சொல்லிவிட்டார். காரணம், பாகவதரை நேரில் பார்க்க வேண்டும் என்ற ஆவல்தான்.

பாகவதர் அவர்கள் பிள்ளைகளைப் பள்ளியில் சேர்க்கும் பொருட்டு ஒரு பள்ளிக்கு வருவதென்பது அவ்வளவு சாமான்யமா, என்ன? அதற்கு வேண்டிய நேரந்தான் அவர்களுக்கு ஏது? சென்னை, பூனா, பம்பாய், கோவை என்று அவர்கள் எப்பொழுது பார்த்தாலும் எங்கேயாவது சென்றுகொண்டே இருப்பார்கள். என்றைக் காவது ஒரு நாள் பெங்களூர்க்கு வருவார்கள்; வந்தாலும் ஏதாவது ஓர் ஓட்டலில் தான் தங்குவார்கள். அவ்வப்போது வீட்டுக்கு வந்து பிள்ளைகளைப் பார்த்துவிட்டுப் போய் விடுவார்கள். அவர்களுடைய குடும்பத்தில் உள்ள யாரும் தைரியமாக அவர்களிடம் சென்று பேசமாட்டார்கள். நான் மட்டும் அதற்கு விதிவிலக்கு.

நாட்கள் கடந்தன; பெண்கள் இன்னும் பள்ளியில் சேர்ந்தபாடில்லை. ஒரு நாள் பாகவதர் அவர்கள் பெங்க ளூருக்கு வந்திருக்கிறார்கள் என்ற செய்தி எனக்கு எட்டியது. உடனே அம்மா அவர்கள் பொறுப்பை என் தலையில் கட்டிவிட்டார்கள். காலை ஏழு மணியளவில் நான் அவர்கள் தங்கியிருந்த ஓட்டலுக்குச் சென்றேன். விஷயத்தை மெல்ல அவர்கள் காதில் போட்டேன். 'நான் வந்துதான் ஆகவேண்டுமா?' என்று கேட்டார்கள். 'ஆம், நீங்கள் வரா விட்டால் பிள்ளைகளைப் பள்ளியில் சேர்க்க மாட்டார்கள் போலிருக்கிறது' என்றேன். 'சரி, புறப்படலாம்' என்றார்கள்.



வீட்டுக்கு வந்தோம்; குழந்தைகள் வந்து காரில் ஏறிக்கொண்டார்கள். கடைசியாக நானும் ஏறிக் கொண் டேன்; கார் புறப்பட்டது.

பள்ளி நிர்வாகிகள் எங்களை அன்புடன் வர வேற்றார்கள். பதிவு பண்ணுபவர்கள் எவ்வளவு கால தாமதம் பண்ணமுடியுமோ அவ்வளவு காலதாமதம் பண்ணினார்கள். நாங்கள் வந்ததிலிருந்து பள்ளியும் நடை பெறவில்லை; பாடமும் நடைபெறவில்லை. ஜன்னல் வழியாகவும், கதவு வழியாகவும் பிள்ளைகளும் ஆசிரியைகளும் எங்களையே எட்டி எட்டிப்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கடைசியில் பதிவெல்லாம் ஒருவாறு முடிந்தது.

ஆசிரியைகள் சிலர் வந்து, பிள்ளைகள் பாகவதர் அவர்களைப் பார்க்கவிரும்புகிறார்கள் என்றும், சிறிதுநேரம் அவர்களை வகுப்பறைகளுக்கு அழைத்துக் கொண்டு வரும் படியும் வேண்டினார்கள். நான் பாகவதர் அவர்களைத் திரும்பிப் பார்த்தேன்; 'அதற்கென்ன, போகலாமே!' என்றார்கள்.

நாங்கள் வகுப்பு வகுப்பாகக் கூட்டிச் செல்லப் பட்டோம். குழந்தைகளின் இன்முகம் கண்டு பாகவதர் அவர்கள் மகிழ்ந்தார்கள். அவர்களைப் பார்த்து, 'நன்றாகப் படியுங்கள்; ஆசீர்வாதம்' என்று சொல்லிக்கொண்டே வந்தார்கள்.

பாகவதர் அவர்களை நேரில் பார்த்த குழந்தைகளின் ஆனந்தத்துக்கு எல்லையுண்டோ?

பள்ளியினின்றும் விடைபெற்று மீண்டோம். வரும் வழியில், 'அந்தப் பள்ளியில் எத்தனை குழந்தைகள் படிக்கும்?' என்று பாகவதர் அவர்கள் கேட்டார்கள். 'ஏறக் குறைய ஆயிரம் பேர் இருக்கலாம்' என்றேன். 'இவ்வளவு தானே, இன்று மாலையே அவர்களுக்கெல்லாம் தேநீர் விருந்து கொடுக்க ஏற்பாடு செய்து விடுங்கள்' என்றார்கள். அப்படியே அந்த விருந்து அன்று மாலையே நடைபெற்றது.

தம்மைப் பார்த்து மகிழ்ந்த குழந்தைகளைத் தாமும் மகிழ்விக்கவேண்டும் என்பதற்காகவே பாகவதர் அவர்கள் அன்று என்னைத் தேனீர் விருந்துக்கு ஏற்பாடு செய்யச் சொன்னார் போலும். என்னே அவர்களுடைய குழந்தை உள்ளம்!''

எப்படியிருக்கிறது கதை? –பிழைக்கத் தெரிந்த பாகவதரா இவர்? –அது தெரிந்தவராயிருந்தால் இவர் ஏன் பள்ளிக்கூடத்துக் குழந்தைகளைக் கூப்பிட்டு விருந்து வைக்கப்போகிறார்? பத்திரிகைக்காரர்களையல்லவா கூப்பிட்டு விருந்து வைத்திருப்பார்?

அதுதான் போகட்டுமென்றால், இவருடைய நிலைமை அறிந்து, இவருக்கு யாராவது உதவ முன்வந்தால் அவர்களிடம் இவர் என்ன சொல்வது? –'எனக்கு வாங்கிப் பழக்கமில்லை; கொடுத்துத்தான் பழக்கம்' என்றா சொல்வது? கொடுப்பதை வாங்கிக்கொண்டு, 'அப்படி என்ன பிரமாதமாகக் கொடுத்துக் கிழித்துவிட்டான்? அவன் கொடுக்காவிட்டால் நான் பழைய நிலைக்கு வந்திருக்க மாட்டேனா?' என்றல்லவா சொல்லியிருக்க வேண்டும்?

இப்படியெல்லாம் பிழைக்கத் தெரியாமல் பிழைத்த பாகவதர், 'அமரகவி'க்குப் பிறகும் கால வேறுபாட்டை உணராமல் எப்பொழுதும்போல் தம்மையும் தம்முடைய திறமையையும் மட்டுமே நம்பி நாடகம், கச்சேரி, சினிமா ஆக மூன்று துறைகளிலும் முழுமூச்சுடன் ஈடுபட்டார். அதன் பயனாக அவருடைய பன்னிரண்டாவது படமாக



'சியாமளா'வும், பதின்மூன்றாவது படமாகப் 'புதுவாழ்வு'ம் வெளிவந்தன. அவை 'அமர கவி'க்குக் கிடைத்த அற்ப சொற்ப வெற்றியையும் பொய்யாக்கித் தோல்வியே அடைந்தன.

இந்த நிலையில்தான் தம்மைக் கண்டதும் ஒரு காலத்தில் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தலட்சோப லட்சம் மக்களையும் அவர் பார்த்தார்; தம்மைக்கண்டும் காணாதது போல் போன மக்களையும் அவர் பார்த்தார்.

பார்த்த பின் என்ன செய்தார்? – சிரித்தார்; சிரித்துச் சிரித்து மனம் சலித்தார்.

அதன் பயனாக எழுந்தது விரக்தி; பிறந்தது வேதாந்தம்!

'மனிதன் கைவிட்டாலும் கடவுள் தம்மைக் கைவிட மாட்டார்' என்று அவர் நம்பினார். அந்தக் கடவுளோ அவருடைய கண்களைப் பறித்துவிட்டு வேடிக்கை பார்த்தார்!

கொடுமை, கொடுமையிலும் கொடுமை!

கடைசியாக அவர் தஞ்சமடைந்த இடம் தஞ்சை மாரியம்மன் கோயில். அங்கேதான் திரு எஸ்.எஸ். ராஜேந்திரன் அவரைச் சந்தித்து, ''வாருங்கள்; உங்களுக்கு நான் கனகாபிஷேகம் செய்து வைக்கிறேன்!'' என்றார்; சொன்னதே போதும்; செய்துவைத்தமாதிரி!'' என்று சொல்லிவிட்டார் பாகவதர்.

அவர் பார்க்காத கனகமா? அவர் பார்க்காத வைர வைடூரியங்களா?

எல்லாவற்றையும் பார்த்து, அனுபவித்து, அலுத்துப் போன அவருக்கு, அப்போது இந்த உலகத்தில் எதுவுமே வேண்டியிருக்கவில்லை. எல்லாவற்றையும் தாண்டிய நிலையில் அவர் நின்றார்!

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் திரு எம்.ஏ.வேணுவின் பெருமுயற்சியில் 'சிவகாமி' உருவாயிற்று. இது பாகவதரின் பதினான்காவது படம். இந்தப்படம் முடிவதற்கு முன்னரே அவருடைய ஆயுள் முடிந்துவிட்டது.

அந்நாள் 1 – 11 – 55 ஆகும்.

அவருடைய மறைவுக்குப்பின் மாண்புமிகு நெடுஞ்செழியன் சொன்னார்:

''எழிலிசை மன்னர் மறைந்தார். அவர் தந்த இன்னிசைத்தட்டுக்களும், சிறப்புமிக்க திரைப்படங்களும் நம்மிடம் இருக்கின்றன. அவற்றை என்றும் எப்பொழுதும் பாதுகாப்போம்.''

சொன்னதைச் செய்யக்கூடிய வசதியும் வாய்ப்பும் இப்போது அவருக்கும் அவருடைய சகாக்களுக்கும் இருக்கின்றன. 'செய்வார்கள்' என்று நாம் நம்பலாம்.



ஒரு கடிதம் :

## தந்தையைப் போலவே தனயனும்

புகழுக்கு விளம்பரம் தேடாமல் பாகவதர் பலருக்குப் பண உதவி செய்திருப்பதுபற்றிப் 'பாகவதர் கதை'யில் எழுதியிருந்ததைப் படித்து நான் வியப்படைந்தேன். பாகவதரைப் போலவே அவர் மகன் ரவீந்திரனும் அவருடைய குணத்தைப் பெற்றிருக்கிறார் என்பது நான் நடைமுறையில் கண்டறிந்த உண்மையாகும்.

நானும், பாகவதர் மகன் ரவீந்திரனும் மிகவும் நெருங்கிய நண்பர்கள். திருச்சி தேசியப்பள்ளியில் ஒன்பதாவது வகுப்பு முதல் பள்ளி இறுதித்தேர்வு வரை ஒன்றாகப் படித்தவர்கள். நானும் ரவீந்திரனும் திருச்சி ஜங்ஷனில் ரயிலேறிக் கோட்டை ஸ்டேஷனில் இறங்கிப் பள்ளிக்குச் சென்று படித்து வருவது வழக்கம். மதிய உணவு அவருக்குத் தினமும் பள்ளிக்கு இருக்கும். 'ஏன் இத்தனை பெரிய கேரியர்? இவ்வளவு சாதமா சாப்பிடுகிறார்?' என்று நினைத்து, அதன் காரணத்தை அறிந்து கொள்ள நான் ஆவலாக இருந்தேன். மற்றொரு நண்பர் அதன் காரணத்தை விளக்கியபோது என்மகிழ்ச்சி எல்லை கடந்தது.

'நம் வகுப்பிலே படிக்கும் ஏழை மாணவரான (பெயர் ஞாபகமில்லை)...க்கும் சேர்த்துத்தான் அந்தச் சாப்பாடு. அவருக்குத் தாயும் தந்தையும் இல்லை. மூன்று ஆண்டுகளாக நம்நண்பர் ரவீந்திரன் தான் அவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வருகிறார்' என்று அவர் கூறினார். அதைக் கேட்டதும் என் உள்ளம் பூரித்தது. 'என்னே

ரவீந்திரனின் கருணை! இதைக்கூட இவ்வளவு ரகசியமாக வைத்திருக்கிறாரே! நெருங்கிய நண்பனான என்னிடம்கூடச் சொல்லவில்லையே?' என்று எண்ணி எண்ணி என் இதயம் பெருமிதத்தால் விம்மிற்று.

மேலும், பாகவதர் மகனிடம் ஏழை–பணக்காரன் என்ற வித்தியாசம் கிடையாது. ஏழையாகிய என்னை அவருடைய பங்களாவிற்கு (திருச்சி கண்டோன்மெண்ட் பகுதியில் உள்ளது) அடிக்கடி அழைத்துச்சென்று, உணவு அருந்தச் செய்திருக்கிறார். அதேபோல் நான் ஒரு போலீஸ்காரன் மகன் என்று கூட நினைக்காமல், அடிக்கடி நாங்கள் குடியிருந்த 'போலீஸ்'லைனுக்கு சைக்கிளில் வந்து தினமும் என்னைப்பார்த்துப் பேசிவிட்டுப் போனால்தான் அவருக்கு நிம்மதி. பள்ளி இறுதித்தேர்வு எழுதும் சமயம் நான் மிகவும் கஷ்டப்பட்டேன். அப்போது கைம்மாறு கருதாது பலமுறை பணஉதவிசெய்திருக்கிறார். இன்னும் நான் அதை நினைத்து நினைத்து அவரை மனமார வாழ்த்திக்கொண்டே இருக்கிறேன்.

சென்னையில் எனக்கு அரசாங்க வேலை கிடைத்த பிறகு அவருடைய தொடர்பு விட்டுப்போய் விட்டது, அவரும் காரைக்குடி அழகப்பா பொறியியல் கல்லூரியில் படித்து முடித்துவிட்டுத் தற்சமயம் எங்கிருக்கிறார் என்று தெரியவில்லை.

எங்கிருந்தால் என்ன? அவருடைய உதவியை என்றும் நான் நன்றியுடன் நினைத்துக்கொண்டே இருப்பேன்.

திருவல்லிக்கேணி — கே. வேணுகோபால்.



## ஒரு வேண்டுகோள்

விதி வசத்தால் பாகவதர் சிறை செல்ல நேர்ந்த பொழுது அவர் நடித்துக்கொண்டிருந்த வசந்தசேனா, ஸ்ரீவள்ளி, ராஜயோகி போன்ற பல படங்கள் முற்றுப்பெறாத காரணத்தால் வெளிவராமலே போயின. அவற்றுள் ஏவி. எம்.நிறுவனத்தாரின் ராஜயோகியில் எட்டு அற்புதமான பாடல்களை அவர் பாடியிருக்கிறார் என்றும், அந்தப்படம் வெளிவந்திருந்தால் ஹரிதாஸ்கூட அவ்வளவு வெற்றி கண்டிராது என்றும் திரு டி.கே.பகவதி ஒரு பொதுக் கூட்டத்தில் சொல்ல நான் கேட்டிருக்கிறேன். பாகவதர் இருந்த காலத்தில் அவருடைய படங்கள் பாடல்களுக் காகவே வருடக்கணக்கில் ஓடின ஆகையால் 'ராஜயோகி' போன்ற படங்கள் முற்றுப்பெறாமற் போனாலும் அம் மாதிரிபடங்களில் அவர் பாடியுள்ள பாட்டுக்களை இசைத் தட்டுக்களாகவாவது வெளியிட ஏவி.எம்.அவர்களின் குமாரர்கள் முயற்சி எடுக்கவேண்டுகிறேன்.

அத்துடன், இரண்டு ஆண்டுகளுக்கு முன் '67–ல் கலைவாணர்' என்று ஒரு படத்தை, அவர் நடித்த படங் களிலிருந்து சில காட்சிகளைத் தொகுத்து வெளியிட்டு, அன்னாருக்கு அஞ்சலி செலுத்தினார்கள். அதைப்போல் இசைவாணருடைய அமர காவியங்களான சாரங்கதாரா, சிந்தாமணி, அம்பிகாபதி, திருநீலகண்டர், அசோக்குமார், சிவகவி, ஹரிதாஸ்போன்ற படங்களிலிருந்து பாடல்கள் உள்ள சில காட்சிகளை முறையாகத் தொகுத்து வெளியிட்டால் என்போன்ற பாகவதர் பித்தர்கள் மனம் மகிழ்வார்கள்.

சென்னை–28. — என். ரங்கராஜன்.